உ

பவசங்கர தேசிகமே சரணம்

# வேதாந்த ரத்னம்.



பாடியவர்

சுவாமி யோகானந்தகிரி

வேதாந்த ஆசாரியார்.

தலைவர்

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடம்,

தெற்குவாசல்

அவனியாபுரம் சாலை.

மதுரை.

1981

உ

பவசங்கர தேசிகமே சரணம்

# வேதாந்த ரத்னம்.



பாடியவர்

**சுவாமி யோகானந்தகிரி**

வேதாந்த ஆசாரியார்.

தலைவர்

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடம்,

தெற்குவாசல்

அவனியாபுரம் சாலை

மதுரை.

1981



விலை ரூ. 1-50

11-2

ஓம்

# வேதாந்த ரத்னம்

## நூன்முகம்

திருவிலும், உருவிலும், தெள்ளிய அறிவிலும் சிறந்து விளங்கும் சிவநேசச் செல்வர்களே! இன்பமென்பது எள்ளளவும் இல்லாத இவ்வுலகத்தில் எல்லோரும் விரும்புவது இன்பமே. துன்பத்தை ஒருவரும் விரும்பமாட்டார். சுகம் எனக்கு உண்டாகட்டும் துக்கம் உண்டாகாமல் இருக்கட்டும்'' என்னும் சுருதிவாக்யத்தானும் காணப்படுகிறது.

இதனால் எல்லா ஜீவர்களுக்கும் இன்பத்தில் விருப்பமென்பது எளிதில் புலனும். புகைவண்டி மேற்கு நோக்கி செல்லும்போது அதன் கூரைமேல் ஒருசிறு எறும்பு மேற்கிருந்து கிழக்கைநோக்கிச் சென்றாலும் மேற்கே போவதுபோல இன்றைக்குள்ள மனிதர்கள் இன்பத்தைநாடி துன்பம் இருக்குமிடஞ் செல்லுகின்றார்கள்.

சிறுபிள்ளைகளுக்குத் திசை தெரியாதது போல தெளிவு இல்லாத மக்களுக்கு இன்பம் எங்கிருக்கிறது துன்பம் எங்கிருக்கிறதென்று தெரியாது. சிறுவருக்கு தீச்சுடும், தேள்கொட்டும், பாம்புத்தீண்டும் என்று தெரியாது அதுபோல அறிவிலிகளுக்கு எந்நெறியில் சென்றால் இன்பம், எந்நெறியில் சென்றால் துன்பம் என்று தெரியவராது.

சங்கரர் சித்தாந்த ரீதியாக இன்பம் பிரஹ்மத்திலும் துன்பம் உலகத்திலும் இருக்கிறதென்பது துணிபு. 'சுகம் பிரஹ்ம ஜகத்துக்கம்' இன்பம் இனியபிரஹ்ம, துன்பம் தொல்லுலகமென்பது சங்கரர் திருவாக்கு. அறிவால் வருவது இன்பம் அறியாமையால் வருவது துன்பம். பிரஹ்மத்தையறிந்தவன் பரத்தை அடைகிறான்; ஆன்மாவை உணர்ந்தவன் துன்பத்தைக் கடக்கிறான் என்பது சுருதிவாக்கியம். பரம்—பரம் பொருள். இதனால் ஞானமின்றி இன்பமடைய மாட்டாதென்பது கருத்து. கருமம், பக்தி, யோகம், இவையெல்லாம் நேரடியாக இன்பத்தைத் தரமாட்டா. பின்னை? ஞானவாயிலாகத் தரும் என்பது குறிப்பு.

அந்த ஞானம் வேதாந்த விசாரத்தால் எழும். 'விசாரத்தால் வந்தடைந்திடும்'' என்பது கைவல்யம். பொருள்வெளி விமல வேதாந்த நூல்கள் விரிவாக இருப்பினும் எனது சிற்றறிவுக்கு எட்டியதை வேதாந்த ரத்னமென்னும் இச்சிறிய நூலை தமிழ் பாக்களால் பல விருத்தத்தில் பாடியுள்ளேன். இலக்கண இலக்கிய செறிவு இல்லாமலும் கடின நடையில்லாமலும், கருத்து நிறைந்ததும், வருத்தத்தை நீக்குவதும், படிப்பவர் மனக்கவலையை நொடிப்பொழுதில் மாற்றுவதுமாகிய இந்நூலை யெழுதினேன். அங்கணநீர் அரிய கங்கை நீரோடு கலந்து மங்கல நீராவதுபோல் என்புன் கவியும் எமது குருபரன் பொன்கவியோடு கலந்து இன்கவியாகுமென்பதில் யாதொரு ஐயமில்லை. இதில்வரும் குணதோஷங்களைக் கூறிய மதியுடையவர்கள் பொறுத்துக் கொள்வர் என்று நம்புகிறேன்.

நூன்முகம் முற்றிற்று.

இந்நூலை எனது நெருங்கிய நண்பரும், திருத்துருத்தி இந்திர பீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனத்தின் வழிவந்த வேதாந்த பூஷணம், கூடற்கற்பகம், உணர்வெளி உருவர் ஆகிய வேதாந்த ஆசிரியர் மதுரை ஸ்ரீ S. கந்தசாமி பிள்ளை அவர்களது பௌத்திரரும், வேதாந்த மரபினரும், கள்ளமிலாத நெஞ்சினரும் இல்லற தருமத்திற்கு ஏற்ப இல்லையென்னாது ஈபவரும், திருவிலும், தெளிந்த அறிவிலும் திளைத்தவரும், மதுரை ஸ்ரீ மீனும்பிகை அச்சுக் கூடத்தின் அதிபருமான **K. S.** *திருஞான சம்பந்தம்* என்ற *அப்பாவு பிள்ளை.* என்ற அன்பரிடத்தில் படித்துக் காட்டினேன். அவர் அகமகிழ்ந்து இந்நூலை நானே புத்தகரூபமாக்கித் தருகிறேன் என்று மனமுவந்து மொழிந்தார்கள். அவர்களுக்கும் அன்னவரது குடும்பத்தார் அனைவருக்கும் ஆலவாய் அப்பனும், அங்கயற்கண்ணி அம்மையும் அன்பு கூர்ந்து அருள் செல்வத்தோடு பொருள் செல்வமும் அள்ளிக்கொடுத்து அருள்புரிய ஆசி கூறுகிறேன்.

இந்நூல்பாடியவர்
**ஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி**
ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்.
தெற்கு வாசல். அவனியாபுரஞ்சாலை,
கதவு எண். 30
மதுரை.



ஸ்ரீலஸ்ரீ யோகானந்தகிரி சுவாமிகள்.

# வேதாந்த ரத்னம்

## பாகம்—1

வினைகளெல்லாம் விலகவேண்டும் என்று சொல்லி—அம்மே
1. விநாயகனை மீண்டு மீண்டுந் தொழுதெழுந்தேன்—அம்மே.

பாரிலுள்ள பொருள் முழுதும் பரப்பிரமம்—அம்மே.
2. பாராமல் இன்னும் பரிதவித்தேன்—அம்மே.

எல்லோரும் என்சொரூபம் என்றெண்ணி—அம்மே.
3. இனிய முக்தியானந்தம் எய்தி நின்றேன்—அம்மே.

ஆணுமில்லைப் பெண்ணுமில்லை யலியுமில்லை—அம்மே.
4. அனைவர்களும் பிரமமென்று அகமகிழ்ந்தேன்—அம்மே.

சொன்னாலும் கேளாதத் தொல்லுலகில்—அம்மே.
5. சொணைக்கெட்ட மக்களை நான் என்செய்வேன்—அம்மே.

ஆழாழி வளைந்திருக்கும் அகிலமெல்லாம்—அம்மே.
6. ஆனந்த வடிவமென்று அன்பு செய்தேன்—அம்மே.

எங்கெங்கும் பார்த்தாலும் இறைவடிவம்—அம்மே.
7. இதையன்றி மற்றொன்றும் நானறியேன்—அம்மே.

உள்ளபடி பார்த்தாலும் உன்சொரூபம்—அம்மே.
8. உன்னையன்றி யுலகத்தில் ஒன்றுமில்லை—அம்மே.

அனைவர்க்கும் இந்த மதியளித்திடுவாய்—அம்மே.
9. அருள்ஞான தேவியுன்றன் அடிபணிந்தேன்—அம்மே.

இன்னலுள்ள உலகத்தில் எவ்வுயிரும்—அம்மே.
10. இன்பமென்று தெரியாமல் துன்பமுற்றார்—அம்மே.

யாராரும் என்னென்ன சொன்னாலும்—அம்மே.
11. எள்ளளவும் கேளாமல் இருக்கவேண்டும்—அம்மே.

கூடிருந்து அனைவர்களும் குலவுவார்கள்—அம்மே.
12. கூற்றுவந்து அழைக்கும்போது குலவுவாரோ—அம்மே.

பொன்பொருள்கள் இருக்கும்போது பொருந்திருப்பார் – அம்மே
13. பொருளெல்லாம் தொலைந்தபோது பொருந்துவாரோ – அம்மே.

காலமெல்லாம் வீணுகக் கழித்திருப்பார் – அம்மே.
14. காலன்வந்து அழைக்கும்போது கதறுவார்கள் – அம்மே.

அடியவர்கள் முன்னிருக்க அஞ்சுவார்கள் அம்மே.
15. அறிவிலிகள் முன்னிருந்து கொஞ்சுவார்கள் – அம்மே.

வேதாந்தங் கேட்பதற்கு வெருவுவார்கள் — அம்மே.
16. வீணுரைக் கேட்பதற்கு விரும்புவார்கள் — அம்மே.

அனைவர்களும் சுயநலத்தில் அழுந்துவார்கள் – அம்மே.
17. அதனுலே வீடுபேற்றை யடையமாட்டார் — அம்மே.

இன்பமாக இருப்பதற்கு எண்ணுவார்கள் — அம்மே.
18. இனிமையுள்ள பிரமத்தை யெண்ணமாட்டார் — அம்மே.

உறவரென்றும் பகைவர்என்றும் ஒருவரில்லை – அம்மே.
19. உணராதத் தன்மையினுல் ஒறுத்திருப்பார் – அம்மே.

எல்லோரும் இறந்து போவாரென்றறிந்தும்--அம்மே.
20. ஈயாத மக்களைநான் என்சொல்வேன்--அம்மே.

நாளுமில்லை கேளுமில்லை நலிந்தோர்க்கு--அம்மே.
21. ஞானமுள்ள மனிதற்கு நலிவுமில்லை--அம்மே.

கண்ணிருந்தும் பாராதக் கயவரைப்போல்--அம்மே.
22. கருத்திருந்தும் நோக்காமல் கதியிழந்தார்--அம்மே.

அறிவுள்ள பெரியோரை யகமகிழ்ந்தேன்--அம்மே.
23. அறிவிழந்த ஈனரை நான் அவமதிப்பேன்--அம்மே.

ஆன்மாவை யடைந்தோரை அன்புசெய்வேன்--அம்மே.
24. அதையுணரா வீணரைநான் அவமதிப்பேன்--அம்மே.

நாமரூப செகமுழுதும் நம்சொரூபம்--அம்மே.
25. நாடியதைப் பாராமல் நமக்குவேறு--அம்மே.

ஓடியாடி உழைத்தாலும் ஒன்றுமில்லை--அம்மே.
26. உணர்வுகெட்ட மக்களை நான் என்சொல்வேன்--அம்மே.

உள்ளிருந்தும் ஆன்மாவை யுணரமாட்டார்--அம்மே.
27. ஊமரைப்போல் ஓடியாடி ஒழிந்துபோவார்--அம்மே.

எத்தனையோப்பிறப் பிறப்பை யெடுத்திளைத்து--அம்மே.
28. இனிமையுள்ள மானுடத்தில் இசைந்துவந்தார்--அம்மே.

நெஞ்சுக்குள்ளே நீயிருந்தும் நினையாமல்--அம்மே.
29. நெடுநாளாய் சீரழிந்து நினைமறந்தேன்--அம்மே.

நல்லோர்கள் கூட்டுறவை நாடிநின்றும்--அம்மே.
30. ஞானமிலாத் தன்மையினல் நலமிழந்தார்--அம்மே.

இந்திரஜாலம் போல இவ்வுலகையம்மே--அம்மே.
31. எண்ண வேண்டும் என்று சொல்லி யிகழவைத்தாய்—அம்மே.

ஊனமுள்ள உடலைமட்டும் உண்மையென்று - அம்மே.
32. ஒளித்திருந்த ஆன்மாவை யுணரவில்லை—அம்மே.

ஆலயமே காயமென்று அறிந்திருந்தும்—அம்மே.
33. அதற்குள்ளே பரம்பொருளை யறியவில்லை—அம்மே.

ஆணவத்தை யகற்ருமல் அறிவிழந்தார்—அம்மே.
34. அதனலேப் பிறவித்துன்ப மநுபவிப்பார்—அம்மே.

ஈனமுள்ள வுடலையென்றும் இருப்பதாக—அம்மே.
35. இறையருளைப் பேணுமல் ஈடழிந்தார்—அம்மே.

யார்வந்து என்ன செய்வார் என்றெண்ணி—அம்மே.
36. இருக்கும்போது யமன்வந்து எடுத்துச் சென்ருன்—அம்மே.

இரையைத்தேடி யெப்போதும் இரந்தலைந்தார்—அம்மே.
37. இறையைத்தேடித் திரியாமல் ஈனமுற்ருர்—அம்மே.

ஜீவப்பிரம ஐக்கியமென்று செப்புவார்கள்—அம்மே.
38. சிரத்தையோடுச் சிரவணத்தைச் செய்வதில்லை—அம்மே.

வீட்டிலுள்ள மக்களெல்லாம் வெறுத்தப் பின்னர்—அம்மே.
39. வேதாந்தங் கேட்பதற்கு விரைந்தெழுவார்—அம்மே.

நாடோரும் வேதாந்தம் கேட்க மாட்டார்—அம்மே.
40. நன்றிக்கெட்ட மக்களை நான் என்செய்வேன்—அம்மே

விதவிதமாய் வேதாந்தம் விளம்பினலும்—அம்மே.
41. விரும்பாத வீணரை நான் என்செய்வேன்—அம்மே.

ஞானமின்றி நற்கதிக்கு நல்வழிகள் – அம்மே.
42. நாடினும் கிடையாதென்று நன்றுரைத்தார்—அம்மே.

அம்ப ஐய அண்ணனென்று அனைவர்களும் – அம்மே.
43. அகத்து மட்டும் கூடிநின்று அழுவார்கள் -- அம்மே.

இவருரையைக் கேட்டு என்றும் இரங்கவேண்டாம்—அம்மே.
44. என்றைக்கு இவர் நமக்கு இன்பந்தந்தார்—அம்மே.

குருசொல்லும் வாக்கியத்தில் குணமிருக்கும் – அம்மே.
45. கோணுமல் கேட்டடைவாய் குணமனைத்தும்—அம்மே.

அவர்பணியை யென்னுளும் அகமகிழ்ந்து—அம்மே.
46. ஆற்றிவந்தால் அரும்பிணியும் அகன்றுபோகும் – அம்மே.

உபநிஷத்தைக் கேளாமல் உறுதுயரம் —அம்மே.
47. ஒழிந்திடுமோ நன்ருக உணர்ந்துபாரு – அம்மே.

எதற்காக இங்கு வந்தோம் எண்ணிப்பாரு—அம்மே.
48. இதனலே யெல்லையிலா இன்பம் எய்தும்—அம்மே.

ஆன்மாவை யறியாமல் அங்கு சென்ருல்—அம்மே.
49. அவன் வந்து சொல்லென்ருல் அன்றென்சொல்வாய்—அம்மே.

தலைமேலே கையைவைத்துத் தளர்ந்து நின்ருல்—அம்மே.
50. தளராமல் முன்னைவந்து சாடி நிற்பான்--அம்மே.

இத்தனைநாள் என்செய்தாய் ஏன்றுக் கேட்பான்--அம்மே.
51. இதற்குபதில் என்சொல்வாய் எனக்கு சொல்லு--அம்மே.

எத்தனைதான் சொன்னுலும் இசையமாட்டார்--அம்மே.
52. எமன்ஓலை வந்தபோது எண்ணிப் பார்ப்பார்--அம்மே.

மாடுமனை மக்களென்று மகிழ்ந்திருப்பார்--அம்மே.
53. மாயன்வந்து அழைக்கும் போது மறைந்திருப்பார்--அம்மே.

ஐம்பொறிகள் பின்னை சென்று அறிவிழந்தார்--அம்மே.
54. ஆன்மாவை அடைந்திருந்து அகமகிழ்ந்தார்--அம்மே.

அரன்நமக்கு ஆயுள்நூறு அள்ளித்தந்தான்--அம்மே.
55. அதைமுழுதும் பாழாக்கி அழிந்து போரோம்--அம்மே.

பிரமத்தை நினையாமல் பேதையுற்ருர்--அம்மே.
56. பெருமையுடன் அதைநினைந்து பேறுபெற்ருர்--அம்மே.

ஜாதிபேத வாதமெல்லாம் தள்ளிவிட்டு--அம்மே.
57. சத்ருப பிரமத்தைச் சார்ந்திருப்போம்--அம்மே.

நல்லோர்கள் பொன்னுரையை நாடிநிற்போம்--அம்மே.
58. நாடெல்லாம் பிரமமென்று நவின்று நிற்போம்--அம்மே.

அனைவரையும் இறைவனென்று அன்புசெய்வோம்--அம்மே.
59. ஆருயிரை அவமதித்து அகலமாட்டோம்--அம்மே.

இவ்வுலகில் எவ்வுயிரும் இறைவனென்று--அம்மே.
60. எவர்களுக்கும் துன்பம் ஒன்றும் ஏவமாட்டோம்--அம்மே.

இரவுபகல் என்றெண்ணி இருக்கமாட்டோம்--அம்மே.
61. இறைபணியிலீடுபட்டு இன்புருவோம்--அம்மே.

நாட்டுமக்கள் அனைவர்களும் நம்சொரூபம்--அம்மே.
62. நலம்கனிந்து அவர்களோடு நட்புசெய்வோம்--அம்மே.

ஜாதிபேதம் என்றுசொல்லும் சாக்கடையை--அம்மே.
63. தள்ளிவிட்டு அனைவர்களும் சார்ந்து நிற்போம்--அம்மே.

ஒருஇலையில் கூடிருந்து உணவு உண்போம்--அம்மே.
64. ஒருவரோடு ஒருவர்கூடி உழைத்திடுவோம்--அம்மே.

மாலையிலே சூடுமலர் மலர்ந்திருந்தும்--அம்மே.
65. மறுதினத்தின் காலையிலே வாடிநிற்கும்--அம்மே.

அணிந்திருக்கும் ஆடைகளும் அழிவதுபோல்--அம்மே.
66. அன்புவைத்த ஆக்கைகளும் அழிந்துபோகும்--அம்மே.

கணவனென்றும் மனைவியென்றும் கசிந்திருப்பார்--அம்மே.
67. காலன்வந்து அழைக்கும்போது கைவிரிப்பார்--அம்மே.

நானும் நீயும் ஒன்றென்று நணுகிநிற்பார்--அம்மே.
68. நமன்வந்து அழைக்கும்போது நகர்ந்துநிற்பார்--அம்மே.

பஞ்சகோசம் கடந்து நிற்கும் பரம்பொருளை--அம்மே.
69. பகுத்தறிவால் அறியாமல் பட்டொழிவார்--அம்மே.

அழிந்துபோகும் பொருளனைத்தும் அறிந்திருந்தும்--அம்மே.
07. அதை நம்பி வாழ்ந்திருந்து அவலமானேன்--அம்மே.

எத்தனையோ நன்மை செய்த இறைவனுக்கு--அம்மே.
71. எள்ளளவும் நன்றி செய்ய இசையவில்லை--அம்மே.

நன்றி கெட்ட மக்களைப் போல் நாமிருப்பதம்மே.
72. நரகத்தில் வாழ்ந்திருப்ப தோடும் ஒக்கும்--அம்மே.

என்னன்றிக் கொன்றவர்க்கும் இன்பம் உண்டு--அம்மே.
73. இறை நன்றிக் கொன்றவர்க்கு இன்பம் இல்லை--அம்மே.

மன்னவராய் வாழ்ந்திருந்து மடிந்துபோனார்--அம்மே.
74. மற்றவர்கள் இருப்போமென்று மகிழ்ந்திருப்பார்--அம்மே.

நேற்றிருந்த மக்களெல்லாம் இன்றில்லை--அம்மே.
75. நிரந்தரமாய் நாமிருப்போம் என்றிருப்பார்--அம்மே.

பெரியோர்கள் சொல்லிப்போனப் பேருரைகள்--அம்மே.
76. பொய்க்காது என்றெண்ணிபுத்தி செய்வாய்--அம்மே.

இவ்வுலகை நிலை யென்று எண்ணிருந்தார்--அம்மே.
77. இதனாலே பேரின்பம் இழந்துநின்றார்--அம்மே.

அங்காடி நாய்போல அலைந்து நிற்பார்--அம்மே.
78. அதனாலே யொருபேறுமடைய மாட்டார்--அம்மே.

சுற்றி விட்டப் பம்பரம் போல் சுழன்று நிற்பார்--அம்மே.
79. சூழ் வினையின் வயப்பட்டுத்துயர முற்றார்--அம்மே.

வீடிருந்தும் மாடிருந்தும் வேண்டுபொருள்--அம்மே.
80. விதவிதமாய் தானிருந்தும் விட்டுச்சென்றார்--அம்மே.

தேனீபோல் பொன் பொருளைத் திரட்டிவைத்து--அம்மே.
81. தின்னாமல் உண்ணாமல் சென்றுவிட்டார்--அம்மே.

எத்தனையோ தவஞ்செய்து எடுத்த உடல்--அம்மே.
82. இதன் பெருமை தனைமுழுதும் எண்ணிப்பாரார்.அம்மே.

ஊழ்வினையை வெல்வதற்கு ஒருவராலும்--அம்மே.
83. உண்மையாக முடியாதென்று உரைத்தருள்வார்--அம்மே.

எங்கெங்குஞ் சென்றாலும் எமனைவெல்ல--அம்மே.
84. எவராலும் முடியவில்லையென்று சொன்னார்--அம்மே.

வினைப்பயனைத் துய்ப்பதல்லால் வேறுவழி--அம்மே.
85. விரும்பினாலும் இல்லையென்று வேதமோதும்--அம்மே.

மாதவனே யாதவனே மறையவனே--அம்மே.
86. மனதைவென்றால் எப்போதும் மகிழ்வுறலாம்--அம்மே.

ஜீவன்என்னும் சொல்லின் மேலே செறிந்திருக்கும்--அம்மே.
87. திருச்சுழியைக் குறைத்துவிட்டால் சிவசொரூபம்--அம்மே.

உண்ணுமல் உறங்காமல் ஓடியோடி--அம்மே.
88. உதவுமென்று பொருள் முழுதும் ஒதிக்கிவைத்தார்--அம்மே.

தான்தேடியுண்ணுமல் தரையில் வைத்து--அம்மே.
89. தரித்திரராய் மீண்டுமீண்டும் தரைக்குவந்தார்--அம்மே.

வினைகளெல்லாம் ஒழிவதற்கு வேறுவழி--அம்மே.
90. வேதாந்தம் நீங்கலாக விளம்பவில்லை--அம்மே.

எல்லோரும் ஒன்றுபட்டு இவ்வுலகில்--அம்மே.
91. இந்துமதம் சிறப்பதற்கு எண்ணிடுவோம்--அம்மே.

தீராதபழிகளெல்லாம் தீர்த்துவிட்டோம்--அம்மே.
92. திறமுடனேயொன்று கூடிதிரண்டு நிற்போம்--அம்மே.

வேறுவேறு சித்தாந்த முழுவதையும்--அம்மே.
93. விலக்கிவிட்டு வேதாந்தம் விளம்பிடுவோம்--அம்மே.

சங்கரரும் மற்றுமுள்ள சான்றோரும்--அம்மே.
94. தரணியிலே ஷண்மதத்தை சாற்றிநின்றார்--அம்மே.

பகுத்தறிவு இல்லாதப் பாமரர்கள்--அம்மே.
95. பரம்பொருளை யில்லையென்று பகர்ந்துநிற்பார்--அம்மே.

சேலைதனில் நூலதுபோல் செறிந்திருக்கும்--அம்மே.
96. சித்ரூப பிரமத்தைத் தெரியமாட்டார்--அம்மே.

அதனாலே யநேகசென்மம் அடைந்தடைந்து—அம்மே.
97. அளவில்துன்பம் பெற்றுநின்று அழிந்துபோவார்--அம்மே.

பெரியோர்கள் பொன்மொழியைப் பேணமாட்டார்--அம்மே.
98. பெரும் துன்பமதனாலேப் பெற்றுநிற்பார்--அம்மே.

பொல்லாதப் பிறவியெல்லாம் பொன்றிப்போகும்--அம்மே.
99. பொறுமையுள்ள பிரமத்தைப் பொருந்திவிட்டால்--அம்மே.

ஏழையெளிய மக்களோடு இணைந்து வாழ்வோம்--அம்மே.
100. இவர்களையும் இறைவனென்று எண்ணிவாழ்வோம்--அம்மே.

ஏழைஎளிய மக்களென்று இகழ்ந்துவாழ்வது--அம்மே
101. என்றென்றும் துன்பமன்றி யின்பமில்லை—அம்மே.

இறைவனென்று எல்லோரும் இசைந்து சொல்வார்—அம்மே.
102. இருக்குமவரிடமறியார் எப்பொழுதும்—அம்மே.

தெரிந்தவர்கள் சொன்னாலும் தெரியமாட்டார்—அம்மே.
103. திடமில்லா மக்களைநான் என்செய்வேன்—அம்மே.

தேசப்பற்றும் தெய்வப்பற்றும் செறிந்திருந்தால்—அம்மே.
104. சிறுமையுள்ள நாடுகளும் சிறப்புப்பெறும்—அம்மே.

கனவுபோல உலகமென்று கண்டிருந்தால் அம்மே.
105. கரதலத்தில் முக்திவந்து கனிந்திருக்கும்—அம்மே.

ஞானநூல்கள் ஒன்றாலே நல்கிநிற்கும்—அம்மே.
106. நன்மையுள்ள ஆனந்தம் நமக்கெல்லாம்—அம்மே.

பாரபக்ஷமில்லாமல் பழகிவந்தால்—அம்மே.
107. பரம்பொருளை யெளிதாகப் பற்றிடலாம்—அம்மே.

எல்லோர்க்கும் இந்நெறியை யெடுத்துரைப்பாய்—அம்மே.
108. எழில்ஞான தேவியுன்னை யிறைஞ்சுகின்றேன்—அம்மே.

வேதாந்த ரத்னம் முற்றிற்று.

**சுபம், சுபம், சுபம்.**



# வேதாந்த ரத்னம்

## பாகம்—2

### விநாயகர் காப்பு

விநாயகன் என்றிட வினைகள் நீங்கிடும்
விநாயகன் என்றிட வெல்லலாம் காலனை
விநாயகன் என்றிட வீழ்ந்திடும் மாயையும்
1. விநாயகன் என்றிட வீடடைந்திடுமே.

உமையின் புதல்வனை
இமையினிலிருத்தி
அமைதியைக் காத்திட
2. சமையுடன் தொழுவனே.

### குருமகிமை.

குருபக்தி யெல்லாக் குற்றமும் போக்கும்
குருபக்தி யெல்லாக் குணங்களை நல்கும்
குருபக்தி யெல்லா இன்பத்தைத் தந்து
3. குருபக்தி கோதில் வீடளித்திடுமே.

குருவுக்கு ஒப்பாக தருமமுமில்லை
குருவுக்கு ஒப்பாகத் தேவருமில்லை
குருவுக்கு ஒப்பாக மூவருமில்லை
4. குருவுக்கு ஒப்பாக குருவருள்தானே.

குருவுக்கு நிகராக ஈசனுமில்லை
குருவுக்கு நிகராக தானமுமில்லை
குருவுக்கு நிகராக ஞானமுமில்லை
5. குருவுக்கு நிகராக குருபரன்றனே.

குருவோடு ஒப்பிடில் கோவிந்தனில்லை
குருவோடு ஒப்பிடில் குலதெய்வமில்லை
குருவோடு ஒப்பிடில் கோயிலுமில்லை
6. குருவோடு ஒப்பிடில் கோமானுமில்லை.

### இவ்வுலகில் இன்பமில்லை யென்பது.

இருமையெனும் இவ்வுலகில் எள்ளளவும் இன்பமது
பெருமறைகள் இல்லையென்று பேசுமிந்த முறையதனை
அருமையுள்ள யோகிகளும் அறிவுமிகு ஞானிகளும்
7. ஒருமையுடன் நன்குணர்ந்து ஓதிவைத்தா ரன்னிலையில்.

### ஞானமகிமை.

ஆகம நூல்களும் அறிவு நூல்களும்
ஊகமும் தருக்கமும் ஒள்ளிய ஞானமும்
வேகமாய்க் கற்றுணர் விமல விஞ்சையர்
8. ஏகமாம் பிரமத்தை யிசைந்து வாழ்வரே.

கருமமும் பக்தியும் கரையில் தீர்த்தமும்
தருமமும் தானமும் தவமும் தியானமும்
ஒருமைநல் ஓமமும் உள்ளதாயினும்
9. பெருமை மெய்ஞ்ஞானம் நின்பிறப்பை மாற்றுமே.

### ஆனந்தம் ஆன்மசொருபத்தில் என்பது

அல்லும் பகலும் அறுபது நாழிகையும்
சொல்லுஞ் செயலும் சொரூபத்தில் தானிருந்தால்
வெல்லரும் ஞாலமும் விண்ணவர் ஞாலமும்
10. ஒல்லெனப் பெற்றுயர் இன்பமுஞ் சேர்வரே.

### வெளியில் தேடுவதால் பயனில்லை.

காடுகளும் கானகமும் கடிநதிகள் கந்தரமும்
மேடுகளும் மலையடியும் மேன்மையுள்ள புறநகரும்
வீடுகளும் ஆலயமும் விருப்பமுள்ள வீதிகளும்
11. தேடும்வினை மிகமுயன்றும் தெரியவில்லைச் சின்மயமே.

### ஆத்மாவை யடைந்தவரை வந்தித்தல்.

பிறவியெனும் பெரும் பிணியைப்போக்க வல்லோர்
பிறந்துலகில் வாழ்வரெனப் பேசலாமே
மறந்து முக்திவழியடைய மாட்டார்தம்மை
மாநிலத்தில் கழுதையென மதிக்கலாமே
செறிந்தொளிரும் ஞானநெறி செல்வமிக்கோர்
சிவலோக நாதனெனச் செப்பலாமே
அறிந்தமிகு ஞானிகளை யகிலமெல்லாம்
12. அறிவுசுட ரென்றெண்ணி யடையலாமே.

### கல்விமான் கற்பகம்போல் கறந்து நிற்பர்.

கற்பகமரங்கள்போல கல்விமான் உலகத்திற்கு
தற்பரம் பொருளும் நல்ல சாதனமனைத்தும் ஈந்து
சிற்பரம் பிரமரூபம் தெளிந்த ஆகாசந்தன்னில்
13. நற்பயன் சிவத்திற்காக நாடொரும் பொருந்திநிற்பர்.

### உள்ளிருக்கும் ஆன்மாவை யுணர்ந்து உவகை பெறுதல்.

உள்ளமெனும் கோயிலிலே ஒளிமயமாய் நிறைந்திருக்கும்
கள்ளமிலாப் பரம்பொருளைக் களங்கமிலா மனத்தவராய்
தெள்ளமுதாம் மெய்யுணர்வால் தெளிவுடனே தானறிந்து
14. எள்ளளவும் துன்பமிலா இன்பமுக்தி யெய்துவரே.

### அறிவின் சிறப்பு.

ஞானமே பவவியாதி நன்மணி மருந்ததாகும்
ஞானமே கருமம் பக்திநல்கிடும் உலகினுக்கு
ஞானமே யோகந்தந்து நல்லுறவாகி நிற்கும்
15. ஞானமே முக்தியென்று நவின்றனர் நாவல்லோரே.

### ஜீவன் முக்தன் இலக்கணம்.

தேகத்தின் வேருகத் தன்னைக் கண்டுத்
தெளிந்தவனே சிவசொரூபம் மகனே கேளாய்
போகத்தைத் தியாகமொடு அருந்தி நித்தம்
பூரணமாம் செகமுழுதும் பிரமமென்று

வேகத்தை வினைகளிலே குறைத்து சாந்த
விவேகனாய் நற்குணங்கள் அனைத்தும் பெற்று
16. மோகத்தைத் துன்பமென நன்குத்தள்ளி
முக்தியிலே யென்றென்றுந் திகழுவாரே.

சரியை கிரியை முக்தியைத் தராது.

சரியையும் கிரியையும் சாற்றிடும் யோகமும்
விரிவுறும் பொறிகளை விலக்கலாகுமே
பெரியதோர் பவந்தனைப் போக்கவல்லதோ
17. அரிய மெய்ஞ்ஞானமே யகற்றும் மைந்தனே.

விவேகமே முக்தித் தரும்.

ஞானநெறி யன்றி நல்ல நெறியில்லை
மோனநிலைகள் முழுதும் பெறுதற்கு
தான தருமங்கள் சாதகற்காகவே
18. ஆனவேத மனைத்தும் விளம்பின.

ஞானத்திற்குரிய நல்ல சாதனம்
ஏனமிற் சிரவணம் இனிய மனனமும்
கோணமின்றிய கூறிய யோகமென்று
19. ஆனஆரணம் அறிவிக்கின்றதே.

பிறவியை நினைந்தால் பிணிகள்போகும்.

பிறவியை நினைந்திடில் பிணிகளும் போகும்
பிறவியை நினைந்தக்கால் பிறப்பை வெல்லலாம்
பிறவியை நினைந்திடில் பெரும்பொருள் தன்னை
20. பிறவிப் பயனாகப் பெற்றிடலாகுமே.

தன்னை சிவசொரூபமாக நினைந்து சிவமாதல்.

ஒன்மை உணர்வால் உள்ளத்தொளிரும்
சின்மயமான சிவலோகநாதனை
தன்மயமாகத் தடையற எண்ணி
21. சன்மய முக்தியில் சார்ந்திருப்பாரே.

### அபேதபுத்தி இன்பத்திற்குக் காரணம்,

உன்னையும் தன்னையும் ஒன்றென்று உணரார்
பொன்னையும் பூடணம் அனைத்தையும்போல
உன்னையும் தன்னையும் ஒன்றென்று உணர்ந்த
22. பின்னையும் பூமியில் பிறந்து இறப்பாரோ.

### ஞானமின்றி எவ்வுபாயமும் பயனைத் தரமாட்டா.

ஆடிஅயர்ந்தாலும் அருமறைகள் கற்றாலும்
ஓடிஉயர்ந்தாலும் உலகமெலாம் திரிந்தாலும்
பாடிப் பதைத்தாலும் பக்தியெலாம் புரிந்தாலும்
23. நாடிய நம்சொரூபம் ஞானமின்றி யெய்திடுமோ!

### பெரியோரைப் பேணி பெரும்பொருள் பெறுதல்.

ஊனமிலா உன்வடிவை உயர்ந்தோரை அணுகி என்றும்
மானமெலாம் உதறிவிட்டு மகிழ்வுடனே பணிபுரிந்து
ஈனருடை செயலனைத்தும் எள்ளளவும் பொருந்தாமல்
24. ஞானமெனும் சாதனத்தால் நன்மையுறப் பெற்றிடுவாய்.

### மனம் உறுதியானால் எல்லாம் உறுதியாகும்.

மனமது உறுதியானால் மாதவம் செய்யவேண்டாம்
மனமது உறுதியானால் வாஞ்சையைப் போக்கவேண்டாம்
மனமது உறுதியானால் மாயையை வெல்லவேண்டாம்
25. மனமது உறுதியானால் மாதவன் வயமதாமே.

### இறையருளால் வேதாந்தத்தில் விருப்புண்டாகும்.

ஈசனருளால் எல்லோர்க்கும் வேதாந்த
வாசனை வளரும் மற்றவையாலல்ல
நாசமிலாத நற்பரம் பொருளை
26. பாசமிலாதவர் பற்றுதல் எளிதே.

### சங்கரரை நினைந்தால் சகலமும் எய்திடும்.

சங்கர நின்னை சகந்தனில் நினைப்பவர்
பங்கமில் ஞானமும் பரந்த வைராக்கியமும்
பொங்கிய செல்வமும் புவிமிசைபெற்று நல்
27. மங்கலமான நின் மலரடி சேர்வரே.

**வினைமுதலிய யோகங்கள் வீட்டைத் தரமாட்டா.**

அரியதோர் வினைகளெல்லாம் அளித்திடும் சொர்க்கம்தன்னை
உரிய யோகங்களெல்லாம் ஒடுக்கிடும் பொறிபுலன்கள்
தெரியதோர் உபாசனைகள் தெளிந்த பொன்னுலகம் நல்கும்
28. கரிவர மெய்ஞ்ஞானம்ஒன்றே கரையிலா கைவல்யம்ஈயும்.

**மனிதன் தவப்பயனால் மனிதஉடல் கிடைத்தல்.**

எண்ணிறந்த பிறவிதனில் மானுடப் பிறவியை
இமயவரும் தான் விரும்ப
மண்ணுலகில் தவம்செய்த மாதவர்க்கல்லது
மற்றயவர் அடைதல் அரிது
திண்ணமுடன் பெற்றவரும் தெளிந்த ஞானத்தையுற
தெரியாத புன்மதியினர்
29. கண்ணிருந்தும் அந்தகன்போல் கதியிழந்து பவக்கடலில்
கவல்வதென்னே.

**தேசிகர்பால் வேதாந்தம் கேட்டு திகழ்ந்திடுவாய் என்றல்**

சீருடைய வேதாந்தம் முழுதும் நன்றாய்
தேசிகன்பால் முறைப்படியே கற்றுணர்ந்து
பார்முதலாம் பூதங்கள் ஐந்தினுக்கும்
பரம்பொருளை வேறாகப் பற்றிநின்று
நேராகப் புவிஅனைத்தும் சிவசொரூபம்
நேர்ந்ததெல்லாம் சின்மயமே என்று நோக்கி
30. கார் நிறைந்த மேகம்போல் மகனேநீயும்
கருணைமழை பெய்துலகில் கனிந்து வாழ்வாய்.

**பஞ்சகோச விசாரத்தால் பரம்பொருளை அடைதல்**

பஞ்சகோசத்தைப் பழுதற விசாரிக்கில்
எஞ்சிய ஈசன் எதிர்நோக்கி நிற்பனே
பஞ்ச பாதகமும் பாமரர் நிந்தையும்
31. வஞ்ச மில்மைந்தனே மடிந்துமாளுமே.

## பல உபாயத்தால் பவப்பிணிப் போக்குதல்.

பொல்லாத ஆசையெனும் பெரியநோயைப்
பொறுமையுள்ள ஞானிகளின் ஞானத்தாலும்
நல்லோர்கள் கூட்டமெனும் நன்மருந்தை
நாடோரும் பத்தியமாயுண்பதாலும்
நில்லாத வுலகனைத்தும் என்றுந்தள்ளி
நேர்மையுள்ளத் தெய்வத்தை வணங்கலானும்
எல்லோரும் இறைவடிவா மெனக்கு வேருய்
32. இல்லையெனும் மதியாலும் போக்கலாமே.

## துவைதவாத நிந்தை

ஏகான்ம வாதத்தை யிகழ்ந்த மூடர்காள்
தேகான்ம வாதத்தைச் செப்புஞ் சிறுவர் நீர்.
போகான்ம வாதத்திற் பொருந்திருக்கின்றீர்
33. உலோகான்ம வாதிபோல் உய்வுமக் கில்லையே.

ஆயகலைகள் அறுபத்து நான்கிற்கும்
ஏய இடமான இனிய வேதாந்தத்தை
மாயாவாதமென்று மறுக்குமாக்களே
34. ஓயாதப் பிறவியில் உழன்றுத் திரிவரே.

தூஷணம் நிறைந்த துவைத வாதத்தை
பூஷண மென்றெண்ணும் புல்லிய மூடர்காள்
நாசமிலாத நல் வேதாந்த சொரூபத்தை
35. ஈசவடிவமென்று இறைஞ்சி யேத்துமின்

## அத்வைத வாதம் சிறந்தது.

கல்லான்னிழற்கீழ் கறைகண்டரமர்ந்து
வல்லார் நால்வர்க்கும் மௌனமாயன்று
எல்லா துவைதமும் இறந்தாத் வைதத்தை
36. சொல்லாமற் சொல்லித் துணைபுரிந்தனரே.

தனக்குள்ளே சதாசிவம் சான்ருக நின்றும்
தனக்குள்ளே சிவசக்தி தன்னருள் புரிந்தும்
தனக்குள்ளே ஞானியாய்த் தனைத்த சோதியை
37. தனக்குள்ளே காணுமல் தத்தளித்தனரே.

எட்டுத்திக்கிலும் எங்கெங்கும் நிறைந்து
பட்டப்பகற்போல் பரஞ்சோதி நின்றும்
நட்ட மரம்போல நன்கறியாதவர்
38. மட்டற்றப் பிறவியில் மடிந்து மாள்வரே.

எல்லாம் ஈசன் வர்வம்.

அகமும்நீ புறமும்நீ ஆதியந்தமானநீ
39. ஆகம்நீ யோகம்நீ அறமும்நீ மறமும்நீ.

இரக்கம்நீ யுறக்கம்நீ யின்மைநீ யுண்மைநீ
40. ஈரம்நீ வீரம்நீ யின்பமுள்ள வடிவம்நீ

உளனும்நீ யிலனும்நீ உருவம்நீ யருவம்நீ
41. ஊரும்நீ உயிரும்நீ யுறுதியான துணையும்நீ.

எண்ணும்நீ யெழுத்தும்நீ யெனக்குவாய்த்த நண்பநீ
42. ஏகம்நீ யநேகம்நீ யிகபரங்கள் யாவும்நீ.

ஐயனீ யப்பனீ ஆருயிர்கள் தோழநீ
43. ஒளியும்நீ யொலியும்நீ ஒண்பொருள்கள் தானும்நீ

ஓமும்நீ தாமும்நீ யோதுகின்ற மறையும்நீ
44. ஔவும்நீ யருளும்நீ அருமறைகள் பொருளும்நீ.

கருணைநீ யருணன்நீ கறைநிறைந்த கண்டநீ
45. காமம்நீ யாமம்நீ கருத்தறிந்து முடிப்பன்நீ.

கிளையும்நீ மரமும்நீ கிரணம்நீ தருணம்நீ
46. கீழும்நீ மேலும்நீ கிளர்ந்த யோகஞானம்நீ.

குமரன்நீ கிழவன்நீ குறைவிலாத செல்வம்நீ
47. கூகைநீ காகம்நீ குயிலும்நீ மயிலும்நீ.

கெங்கைநீ கிணறும்நீ கிழக்கும் மேற்கும்நீ
48. கேளும்நீ கோளும்நீ கேண்மைநீ மேன்மைநீ.

கையும்நீ கண்ணும்நீ கண்ணுக்குள் மணியும்நீ
49. கொம்பும்நீ அன்பும்நீ கோதிலாத சுற்றம்நீ.

கோலம்நீ ஞாலம்நீ குணமும்நீ மணமும்நீ
50. கௌவும்நீ காளைநீ கன்றும்நீ யென்றும்நீயே.

## வேதாந்தம் தெரியாமல் வாழ்வது பாதகம்.

மனிதனுய்ப் பிறந்தாலும் மாண்புடனே வாழ்ந்தாலும்
இனியனுய் நின்று இசைந்தாலும்—கனிவான
வேதாந்த முழுதையும் விரிவாகக் கல்லாமல்
51. பாதகனுய்த் திரிவன் பறந்து.

## ஐம்பூதமும் இறைவன்.

மண்ணும்நீ மலையும்நீ மலையும்நீ வளியும்நீ
விண்ணும்நீ விமலன்நீ விருப்பமுள்ள புனலும்நீ
52. நெருப்பும்நீ விருப்பும்நீ நிதியும்நீ விதியும்நீயே.

## சங்கரன் எல்லாம் தருபவன்.

அல்லலை யொழித்து மல்லமாம் உலகில்
தத்துவந்தந்த வித்தக விநோத
சத்தியமூர்த்தி நித்தியவிமல
பத்தியால் உன்னை நித்தமும் தொழுது
53. அத்தனே யப்பனே ஐயனே யெனையாள்.

கத்தனே யென்று கசிந்துள்ளுருகும்
புத்தியிலாதப் புல்லியனதனுல்
வீடும் பொருளும் கேடிலின்பமும்
நாடிடும் எனக்கு நயந்தளிப்பவனே
54. சங்கர சங்கர ஜெய ஜெய சங்கர.

## குருவே இறைவன்.

காலங் கடந்ததொன்றை கருத்தினில் வைப்பதற்கு
ஞாலமுழுதும் நானே நற்குரு நாடிநின்றேன்
ஆலமுண்டப்பன் என்னை யங்கையால் அள்ளித்தூக்கி
55. சீலமாம் உனக்கு நானேத் தேசிகனுனே னென்ருன்,

## தேகத்தை விசாரித்தால் தெளியும் இன்பம்.

மூன்று தேகத்தை முறையாய் விசாரிக்கில்
தோன்றுந் துன்பங்கள் தொலைந்து ஒழிந்திடும்
சான்ற ஆன்மாவும் சச்சிதானந்தமாய்
56. பூன்ற மனத்தினில் புரணமாகுமே.

## ஆக்கை ஆலயம்.

நெஞ்சகமே பெருங்கோயில் நீளுடம்பு வீதிகளாம்
தஞ்சமிலாப் பொறிகளைந்தும் தளராத மணிவிளக்கே
வஞ்சமிலா நல்லறிவு வளப்பமுள்ள சதாசிவமாம்
57. கொஞ்சமிலா நற்குணங்கள் குறைவிலா நிவேத்தியமே.

## கடவுளைத் தொழுபவர்க்கு கைகூடுமெல்லாம்.

காலையும் மாலையும் கடவுளைத் தொழுபவன்
பாலையும் சோறையும் பரிவுடன் உண்பனே
ஆலமர் கடவுளும் அயனரி கடவுளும்
58. சாலவே வந்து சற்கதியளித்திடுவரே.

## ஓம்காரத்தின் பெருமை.

ஓமெனும் மந்திரம் உயிரைக்காக்குமே
ஓமெனும் மந்திரம் ஒன்றே சிறந்தது
ஓமெனும் மந்திரம் ஒழித்திடும் பவப்பிணி
59. ஓமெனும் மந்திரம் உள்ளத்தில் ஒளிருமே.

ஓமெனும் ஓரெழுத்துலகைக் காத்திடும்
ஓமெனும் ஓரெழுத்துணர்வை நல்கிடும்
ஓமெனும் ஓரெழுத்து ஓயாதப்பிறவியை
60. ஓட்டி நல்உத்தம வீடளித்திடுமே.

## சன்மார்க்கத்தை யடைந்தவர்க்கு சாரும் எல்லாம்.

சத்திய மார்க்கத்தைச் சார்ந்திருப்பவர்க்கு
நித்திய முக்தியாய் நின்று இலங்கிடும்
உத்தம நின்னருள் உணர்ந்த ஞானிகள்
61. பத்தரை யுனதடிப்பதியச் செய்வரே.

## காண்பன வெல்லாம் பிரமத்திற்கற்பிதம்.

கானல்நீர் நிகரான வுலகமெல்லாம்
கற்பிதமே பிரமத்தில் எக்காலத்தும்
போனபொருள் மீண்டுவரும் போகுமீண்டும்
பொருதிரைபோல் எழுந்தொடுங்கும் புணரிதன்னில்

ஆனபொருள் அத்தனையும் ஆன்மாவென்றே
அநுதினமும் அநுபவத்தால் அறிந்து நீயும்
ஞானமெனும் நன்மணியை நன்குப்பெற்று
62. நரஉலகில் நாரணனாய்த் திகழ்வாயென்றும்.

புறத்தை நோக்கும்போது துன்பம்.

புறத்தை நாடிப்போகின்ற மூடர்காள்
அறத்தைநாடி யறிமின் ஆனந்தம்
திறத்தொடு பரத்தைத் தெரிந்தவர் முன்னே
63. நிறத்தொடு இலங்குவன் நீர்மலி வேணியன்.

அகத்துக் குள்ளிருக்கும் ஆணவக் காட்டை
மகத்துணர் வென்னும் வாய்ந்த நல்வாளால்
செகுத்து நன்றாக செம்மை செய்தக்கால்
64. பகுத்தறிவுள்ள பரமன் முன்னிற்பனே.

மண்ணுலகில் மூன்று பொருளரிது.

மண்ணுலகில் மூன்றுபொருள் மகத்தென்பார்கள்
மாண்புமிகு பொருளவை தானேதென்பாகில்
எண்ணரிய இனிய நரப்பிறவியொன்றும்
இடர்களையும் சான்றோர்கள் கூட்டமொன்றும்
திண்ணமுள்ள ஆன்மாவை விழைவ தொன்றும்
தெய்வத்தால் அன்றியிவை மூன்றுங்கிட்டா
விண்ணிறைந்த சிவசொரூப சங்கரர்தான்
65. விரித்துரைத்தார் இக்கருத்தை நம்மனோர்க்கே.

பிரமத்தை தெரியாமல் துன்பம்.

பிரமமே நிஜசொரூபமாயிருந்தும்
பேதமையால் தெரியாத தோடத்தாலே
சரைமரணங்களெனும் வியாதியாதி
தாபங்கள் நிறைந்திருக்கும் தரணி தன்னில்
சரியாகப் பிறந்திறந்துத் தவிக்கும் நாளில்
தயாபரனே குருவாகத்தாமே வந்து
அரியதொரு ஞானத்தைத் தந்து என்னை
66. ஆதரித்த விதத்தை நான் என்சொல்வேனே.

குருபரன் தடுத்தாள் கொள்வது.

உன்னை நானிழந்துலகில் ஒரு துணையுமில்லாமல்
அன்னமிலா வுயிர்களைப்போல் அலைந்துளைந்த நாயேனை
நின்னுடைய கருணையினல் நீயுவந்து எனையாண்ட
67. தன்மையினை யாரிடத்தில் சாற்றிடுவேன் தயாநிதியே.

எதையறிந்தாலும் ஆன்மசுகத்திற் கீடாகாது.

உலகனைத்து முணர்ந்தாலும் ஒண்பொருள்கள் பெற்றாலும்
நலங்கனிந்த இன்பத்தை நாடோறும் நுகர்ந்தாலும்
பலகலைகள் கற்றுணர்ந்து பரலோகம் அடைந்தாலும்
68. சலனமிலா ஆன்மாவை சார்ந்தசுகம் எய்துவரோ.

குருபரன் தானேவந்து அருள்புரிதல்.

இவ்வுலகில் எவரெவரை எண்ணியெண்ணி இளைத்தேனை
அவ்வமயம் வந்துவந்து அருள்மிகுந்த தாய்போல
செவ்வையுள்ள ஞானமுதைத் திருச்செவியில் பாய்ச்சியென்றும்
69. கவ்வையிலாப்பொருளை என்றன்கருத்துள் வைத்தாய்குருபரனே

ஞானிகள் இணக்கம் நலந்தரும்.

ஞானிகளிடந்தனில் நயம்படப் பழகில்
வானமும் வையமும் வந்தடைந்திடுமே
போன ஜென்மத்திலும் புனர்ந்த ஜென்மத்திலும்
70. ஆனபாவங்கள் அனைத்தும் மாயுமே.

உலகில் இருக்கும்மட்டும் துன்பமுறும்.

இல்லாத உலகனைத்தும் மகனே கேளாய்
இருக்குமட்டும் துன்பமன்றி யின்பமில்லை
பொல்லாத மனமயக்கம் போகுமாகில்
பொருந்துஜகம் கதிரவன்முன் இருள்போல் போகும்
நல்லோர்கள் அனுபவிக்கும் பரமானந்தம்
நாடோறும் நமக்கதுவும் கிட்டும் அப்பால்
71. எல்லையிலா ஆன்மாவை இனிதுபெற்று
இறுமாந்து என்னுளுமிருக்கலாமே.

தடையற்ற ஞானத்தால் ஜகம் மடியும்.

உண்டிலையென விவகரிக்கும் உலகமெல்லாம்
உறுதுயரம் நிறைந்த மனோமயமதாகும்
சண்டமாருதமென்னும் ஞானக்காற்றால்
தலைசாயும் கார்முகில்போல் ஜகமனைத்தும்
அண்டர்முதல் முனிவர்களும் அடையாநின்ற
அருமையுள்ள மெய்ஞ்ஞானமதனைப் பெற்று
72. தண்டலிலாமுத்திரூப தளராவின்பம்
தரணியிலே தானகச் சாரும் தானே.

ஞானி இல்லில் இருப்பினும் இன்பம் எய்துவன்.

எல்லையைக் கடந்த இன்பமூர்த்தியை
தொல்லையைக் கடக்க துணிந்தமக்களே
அல்லலை அகற்றி அயராத முயற்சியால்
73. இல்லினில் இருந்தும் எளிதில் எய்துவீர்.

நற்சாஸ்திரம் நலம் தரும்.

எல்லாமுணர்ந்தே யிருந்தாலும் இனியகலைகள் கற்றாலும்
நல்லோர்உறவும் சாத்திரமும் நலமாய் பெற்றோர் வீடுற்றார்
பொல்லாவினையும் பெருந்துயரும் போகுமவர்க்கு நிச்சயமாய்
74. வில்லார்தோளன் இராமனுக்கு விரிவாய் உரைத்தார்
வசிட்டருமே.

ஆன்மபரான்மா அகிலமும் ஒன்றாய்
மேன்மையாய் என்றும் விளங்கிடும்நிலையை
கான்மாறியாடும் கடவுளின் கிருபையால்
75. நானென்று பெற்று நலம் பொருந்தினரே.

ஆறறிவுயிராய் அவனியில் வந்தும்
பேரறிவாளனைப் பெறவிரும்பாதவர்
கோரவிபத்தாம் கொடும் பிறவியினில்
76, ஏறவகையின்றி இறந்து மடிவாரே.

### நல்லவர் ஞானநூல் பழக்கம் நலம் தரும்.

நல்லாரிணக்கமும் ஞானநூல் பழக்கமும்
வல்லுணர் குருபரன் மகிழ்ந்த ஆசியும்
பொல்லாத பிறப்பையும் பொருந்திய தீங்கையும்
77. சொல்லாமற் கொன்றுத் துணைபுரிந்திடுமே.

### ஜகத்தில் சங்கரர் சிறந்தவர்.

சங்கரர் ஜகம்தனில் சாலச்சிறந்தவர்
பங்கமில் ஞானத்தை பரிந்துரை செய்ததால்
துங்கமில் உலகினில் துவைதவாதத்தை
78. சிங்கத்தைப் போலவே சீறியெழுந்தனர்.

### எல்லாத் துன்பமும் இகத்தில் இருக்கும்.

பிறப்பிறப்புப்பிணி மூப்புச் சாக்காடென்னும்
பெருந்துயரம் நிறைந்திருக்கும் உலகம் தன்னில்
சிறப்புடைய மனிதராய் வந்தும்ஆன்ம
தெய்வத்தை வணங்காமல் வாளாநின்றும்
இறப்பிலா ஆசையெனும் பெருங்கயிற்ருல்
இன்பமெனக் கட்டுண்டு பசுப்போல் நாளும்
79. திறந்தமுக்தி யானந்தம் அடைந்திருந்தும்
தெரியாமல் மதிமயங்கித் திரிகின்ருரே.

### ஆன்மாவை அறியாமை துன்பம்.

நீருக்குள்மீன்கள் நித்தமும் வாழ்ந்தும்
சாரும்தாகத்தைத் தவிர்க்காதத் தன்மைபோல்
பாரமில்பரம் பொருள் பன்ளுள்நமக்குள்
80. தீரமாயிருந்தும் தெரிந்தடைந்திலமே.

ஆன்மாவை அறியாத அரும்பாவி தனேயும்
நான்என்று தேகத்தை நம்புமுடரையும்
வானிறை சோதியை வழுத்தாநீசனேயும்
81. தாளுக நமன்வந்து தள்ளுவன் நரகிடை.

### எல்லாம் பிரமம் என்பதால் துன்பம் இன்பமாகும்.

பொய்யான பிரபஞ்சம் பிரமமேஎன்று
ஐய்யா உனைப்போலறிந்தவர்க்கு—மெய்யான
துன்பமும் துயரமும் தொலையாப் பிணிகளும்
82. இன்பமாய் மாறும் இணைந்து.

### உலகத்தையுண்டு பண்ணுவதும் ஒடுக்குவதும் புத்தியே.

புத்தியே யுலகத்தைப் பொருந்தச் செய்திடும்
புத்தியே யுலகத்தைப் போக்கவுஞ் செய்யுமே
புத்தியால் மனிதனும் புனிதமாகுவான்
83. புத்தியால் புருடனும் புவியில் தேவனும்.

செகத்தை நோக்கிய சிற்றறிவாளரே
அகத்தை நோக்கிடில் ஆனந்தமாகுமே
இகத்தையும் பரத்தையும் இறைவடிவாமென
84. வகுத்தவர் அன்ன வலியடைந்திடுமின்

### உள்ளத்தை நோக்கினல் உடையவன் முன்னிற்பன்.

உள்ளத்திலிருந்தும் ஒளித்திருப்பவனை
கள்ளத்தை நீக்கிக் காணமுயலுமின்
கள்ளத்தை நீக்கிக் காணமுயன்றக்கால்
85. பள்ளத்தில் வெள்ளம்போல் பாய்ந்து முன்னிற்பனே.

### மும்மூர்த்தியும் ஒரு மூர்த்தியே.

அயனரி யரனும் அறிந்திடில் ஒன்ரும்
அயனரி யரனும் அறிவுருவாகும்
அயனரி யரனும் அறிந்தவரகத்தில்
86. அயனரி யரனும் அமர்ந்திருப்பாரே.

### இந்த சென்மத்தில் ஆன்மாவை யறிதல் சிறந்தது.

இவ்வுலகில் ஆன்மாவை யடைந்து விட்டால்
எடுத்தமானுட சென்மம் சத்யமாமே
அவ்வுலகில் சென்ருன்மா அடைவதென்ருல்
அநுபவிக்கும் துன்பத்திற்களவேயில்லை

எவ்வுலகில் சென்ருலும் இந்த ஆன்மா
எழில் நிறைந்த ஞானமின்றி யடையாதப்பா
செவ்வையுள்ள ஆன்மாவை யிங்கேதானே
87. திறமுடனே யடைந்துதின மணிபோல் வாழ்வாய்

ஈசனும் ஜீவனும் ஒன்று.

மண்ணுக்கு வேருக மட்கலமில்லே
பொன்னுக்கு வேருக பொற்கலமில்லே
பண்ணிய உலகமும் பரமனுக்கன்னியம்
88. எண்ணி நீ யில்லேயென்றிருந்து வாழுதி.

தன்னே விசாரிக்கின் தலேவன் முற்படுவன்.

நானுரென்று விசாரிக்கில் நமக்குளிருக்கும் ஆன்மாவும்
தானுய்வந்து முன்னின்று தளராவின்பம் தந்திடுமே
ஆனலந்த ஆன்மாவை அறிய ஆற்றல் அனேத்திருந்தும்
89. ஏனேமுயற்சித்தடையாமல் இறந்துபிறந்து திரிவானேன்.

ஒவ்வொரு உபாயத்தால் ஒன்ரென்று நீங்குதல்.

கிளர்கின்ற சந்தேகம் கேள்வியால் போகும்.
மிளிர்கின்ற விபரீதம் விஞ்சையால் நீங்கும்
அளறுறும் அஞ்ஞானம் ஆன்ருேரால் போகும்
90. தளராத ஞானத்தால் சகலமும் நீங்குமே

மூன்று உறுப்புக்கள் இருந்தும்பயனில்லே.

மண்ணினிற் பிறந்தும்நல்ல மாதவன் வணங்காச் சென்னி
எண்ணிறந்தின்பமுள்ள இறைவலம் வராதபாதம்
பண்ணிய உலகம்தன்னில் பரமனே குருவாமென்று
91. திண்ணமாய் கருதாநெஞ்சம் சிறப்பிலே மூன்றும்தானே.

நாம்பிரமம் என்பதால் நமக்கொருகேடிலே.

நாமேபிரமம் என்பதனுல் நமக்குப்பிறப்பு இறப்பில்லே
நாமேபிரமம் என்பதனுல் நம்மைத் துன்பமணுகாது
நாமேபிரமம் என்பதனுல் நாமேயது வாயிருக்கின்ருேம்
92. நாமேபிரமம் என்பதனுல் நமக்கு எமனுமஞ்சிடுவான்.

## நாம்பிரமம் என்பதனுல் நமக்கு எல்லாமுண்டு.

நாமேபிரமம் என்பதனுல் நாடுமுழுதும் நம்சொரூபம்
நாமேபிரமம் என்பதனுல் நம்மையன்றியுலகில்லை
நாமேபிரமம் என்பதனுல் ஞானியுறவு நமக்குண்டு
93. நாமேபிரமம் என்பதனுல் நரகமேழும் பாழ்படுமே.

எல்லாம்பிரமம் என்பதனுல் எங்கும்நமக்கு பயமில்லை
எல்லாம்பிரமம் என்பதனுல் இழிந்தோ ருயர்ந்தோராவாரே
எல்லாம்பிரமம் என்பதனுல் எரிந்துமடியும் கருமங்கள்
91. எல்லாம்பிரமம் என்பதனுல் இன்பமுக்தி யெய்திடுமே.

நீயே பிரமம் என்பதனுல் நின்னையன்றி யொன்றுமில்லை
நீயே பிரமம் என்பதனுல் நின்னைபரமன் புகழ்ந்திடுவன்
நீயே பிரமம் என்பதனுல் நிகிலம்யாவும் நீயாவாய்
95, நீயே பிரமம் என்பதனுல் நினக்குயாரும் நிகருண்டோ.

இறைவனை வேறென்று இகழ்கின்ற மூடர்காள்
இறைவனை யொன்றென்று ஏற்றி யிறைஞ்சுமின்
இறைவனை யொன்றென்று ஏற்றி யிறைஞ்சினுல்
96. இறையருள் தானுக எய்திடும் உண்மையே

நான்வேறு நீவேறு என்றெண்ணும் நாத்திகர்
நான்வேறு என்றிடில் நமன்வந்து வளைவனே
நான்வேறு என்றெண்ணும் நலிந்தபுத்திதான்
97. நான்வேறு அன்றெனில் நசித்துப்போகுமே.

எல்லையில் வேதாந்த இனிய வாதத்தை
நல்லோர் நமக்கு நவின்றதால்—சொல்லாமால்
துன்பத்தைப் போக்கித் துணைபுரிந்திடுமென
98. இன்பமாய் ஏற்போம் இசைந்து.

ஜீவனே சிவனென்று செப்பும் செல்வர்கள்.
பாவனமாகி பரஞானம் பெறுவர் — சாவாமல்.
என்றென்றும் முத்தராய் இகத்தினில் வாழ்ந்து.
99. சென்றிடுவர் வீடுசிறந்து,

ஆரியசங்கரர் அருள்தன்னைப் பெற்றால்
சீரிய செல்வமும் சிவலோக வின்பமும்
கூரியஞானமும் கோதில் முக்தியும்
100 பாரினில் நமக்கு பரிந்தடைந்திடுமே

### மனிதப்பிறவியின் பயன்.

மண்ணுலகில் வந்து மனிதராய்ப் பிறப்பது
தன்னுடைச் சொரூபம் தான்பெறுதற்கே – எண்ணிறந்த
ஆன்மாவை அறியாத அறிவிலாமாந்தர்
101 தான்பிறந்து தவிப்பர் தளர்ந்து.

சித்தாந்தமென்னும் சீரியமரந்தனில்
நறுமணம்கமழ்ந்த நல்லவேதாந்த
கனிஒன்றைப் பறித்து கரத்தால்பிழிந்து
எடுத்தரசமெனும் இனியபிரமத்தை
தொடுத்துப்பருகினால் தொலைந்திடும் பவப்பிணி
என்று சங்கரர் இசைத்தனர் எமக்கே
102 சங்கர! சங்கர! ஜெய ஜெயசங்கர!

### பகுத்தறிவு இலார்க்கு பலியாதுஞானம்.

பகுத்தறிவில்லாத பாமரர்க்கென்றும்
பகர்வதெல்லாம் பாம்பிற்குப் பால்போலாகும்
இகத்திலுள்ள இனிய மதியுடைவர்க்கு
எள்ளளவு சொன்னாலுமின்ப மெய்தும்
தொகுத்துரைத்த பெரியோர்கள் உபதேசத்தை
துர்மதிகள் ஒருநாளும் கேட்கமாட்டார்
103. மகத்தான எமனவரை மட்டில்லாத மரணமெனும்
பெருங்குழியில் தள்ளுவானே.

### கீதையின் பெருமை.

பகவத் கீதையில் பார்த்தனுக்காகவே
பகவான் பகர்ந்த பரமார்த்த ஞானத்தை
செகத்தவர் அனைவரும் சிரவணஞ்செய்து
மகத்தான பிரமத்தை மகிழ்வுடன் பெறுவரே.

### ஜீவனும் சிவனும் ஒன்றெனல்.

சீவனும் சிவனும் இரண்டென்பர் சிறுமையோர்
சீவனே சிவமென்றுச் செப்பியுந் தெரிகிலார்
சீவனே சிவமென்றுச் செம்மையாய்த் தெரிந்தபின்
105. சீவனே சிவமாய் செறிந்திருப்பாரே.

*"சத்யம் சிவம் சுந்தரம்"*

வேதாந்த ரத்னம் முற்றிற்று.

மதுரை ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் மடத்தின் வெளியீட்டின் புத்தக விபரங்கள்

| | | |
|---|---|---|
| 1) | பிரம்மானந்த யுக்திரத்னகரம் | ரூ. 15-00 |
| 2) | ஞானவாசிட்டம் | ரூ. 15-00 |
| 3) | பக்தி ஞானமிர்தம். | ரூ. 4-00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம். | ரூ. 2-00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம். | ரூ. 5-50 |
| 6) | குருபரக்கண்ணி. | ரூ. 1-00 |
| 7) | வேதாந்த ரத்னம். | ரூ. 1-50 |